නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus

NEW



අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

ඉන්දීය ඉතිහාසය II (I කොටස)
இந்திய வரலாறு II (பகுதி I)
History of India II (Part I)

25 A T II

23.08.2019 / 0830 – 1140

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவுசெய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.

**இந்திய வரலாறு - ஆதிகாலம் முதல் கி.பி. 1206 வரை**

சுட்டெண் : ..................................

**அறிவுறுத்தல்கள் :**

※ இப்பகுதி **40** வினாக்களைக் கொண்டுள்ளது. **எல்லா** வினாக்களுக்கும் **இவ்வினாத்தாளிலேயே** விடை எழுதுக.
※ ஒவ்வொரு வினாவுக்கும் தரப்படுள்ள **ஐந்து** தெரிவுகளில் **ஒன்று** மட்டுமே சரியானது. அச்சரியான விடையைத் தெரிவுசெய்து தரப்பட்டுள்ள **அறிவுறுத்தல்களுக்கேற்ப குறிப்பிடுக.**
※ இப்பகுதிக்கு **40** புள்ளிகள் வழங்கப்படும்.
※ **இரண்டு** பகுதிகளுக்கும் வழங்கப்பட்டுள்ள நேரம் **மூன்று மணித்தியாலங்களாகும்.** விடைகளை எழுதிய பின்னர், **பகுதி I** இன் விடைத்தாள்களை **பகுதி II** இன் விடைத்தாள்களுடன் **இணைத்துக் கையளிக்குக.**

## பகுதி I

● **1** தொடக்கம் **10** வரையான வினாக்கள் ஒவ்வொன்றிலும் **ஐந்து** பெயர்கள் வீதம் தரப்பட்டுள்ளன. அப்பெயர்களுள் **ஒன்று** ஏதோ ஒரு காரணத்தினால் ஏனையவற்றுடன் **பொருந்தாது. பொருந்தாத** அப்பெயரை இனங்கண்டு, அதன் **இலக்கத்தை அடைப்புக்குறியினுள்** எழுதுக.

**1.** (1) ஹெரடோற்றஸ் (2) பிளினி (3) மெகஸ்தெனிஸ்
(4) ஜஸ்ரின் (5) ஸ்ராபோ (.........)

**2.** (1) பாருகச்சா (2) சுப்பராக (3) தாம்பரலிப்தி
(4) தேவகிரி (5) காவேரிப்பட்டினம் (.........)

**3.** (1) நர்மதா (2) கிருஸ்ணா (3) துங்கபத்திரா
(4) மகாநதி (5) கோதாவரி (.........)

**4.** (1) உஜ்ஜயினி (2) சுவர்ணகிரி (3) தக்ஷீலா
(4) கலிங்க (5) தோசாலி (.........)

**5.** (1) மேகதூதம் (2) குமாரசம்பவம் (3) முத்ரா-ராக்ஸஸ
(4) மாளவிகாமித்ரா (5) ருதுசம்காரம் (.........)

**6.** (1) பாக் (2) உதயகிரி (3) அஜந்தா
(4) எல்லோரா (5) ஔரங்கபாத் (.........)

**7.** (1) நாகசேன (2) அச்யுதா (3) ருத்ரதேவா
(4) மதிலா (5) வியாக்ரராஜ (.........)

**8.** (1) மாறவர்மன் (2) மகேந்திரவர்மன் (3) நரசிம்மவர்மன்
(4) பரமேஸ்வரவர்மன் (5) நந்திவர்மன் (.........)

**9.** (1) முகமத் பின் காசிம் (2) சபுக்திஜீன் (3) அல்பிருணி
(4) கஸ்னி மஹ்மூத் (5) கோரி முகமத் (.........)

**10.** (1) கர்ப்பகிருகம் (2) விமானம் (3) அந்தராளம்
(4) துவார மண்டபம் (5) இரதம் (.........)

- **11** தொடக்கம் **15** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் **ஐந்து சோடிப் பெயர்கள்** தரப்பட்டுள்ளன. அவற்றுள் ஒரு சோடியிலுள்ள பெயர்கள் ஒன்றுடன் ஒன்று **பொருந்தாது** உள்ளன. **பொருந்தாத** அச்சோடியை இனங்கண்டு அதன் **இலக்கத்தை அடைப்புக்குறியினுள்** எழுதுக.

**11.** (1) சம்பா - அங்க
(2) தக்ஷீலா - கம்போஜ
(3) இந்திரபிரஸ்த - குரு
(4) மதுரா - சூரசேன
(5) வாரணாசி - காசி (.........)

**12.** (1) வம்சக் கதைகள் - இராஜதரங்கிணி
(2) நாடகம் - சகுந்தலா
(3) காவியம் - பஞ்சதந்திரம்
(4) பாடல்கள் - இரகுவம்சம்
(5) அகராதி - அமரகோஷ (.........)

**13.** (1) இராஷ்டிரகூட - முதலாம் நாகபட்ட
(2) வலபி - இரண்டாம் துருவசேன
(3) மௌகாரி - கிரகவர்மன்
(4) புஸ்யபூதி - பிரபாகரவர்த்தன
(5) கௌட - சசங்க (.........)

**14.** (1) ரூபர் - சட்லஜ்
(2) இந்திரபிரஷ்த - ஜமுனா
(3) ஹரப்பா - ராவி
(4) பாருகச்சா - நர்மதா
(5) வரங்கல் - மகாநதி (.........)

**15.** (1) சரக - குஷாணர்
(2) பதஞ்சலி - சுங்க
(3) தண்டின் - பல்லவர்
(4) பில்கண - சாதவாகனர்
(5) விசாகதத்த - குப்தர் (.........)

- **16** தொடக்கம் **20** வரையுள்ள ஒவ்வொரு வினாவிலும் சில பெயர்கள் / கூற்றுகள் / திகதிகள் ஆகியவற்றின் தொகுதிகள் **X, Y** என்னும் நிரல்களில் தரப்பட்டுள்ளன. **Y** நிரலில் தரப்பட்டுள்ள பெயர்கள் / கூற்றுகள் / திகதிகள் **X** நிரலில் தரப்பட்டுள்ளவற்றுடன் ஏதோ ஒரு வகையில் தொடர்புபட்டவை. ஆனால் அவை சரியான தொடர் ஒழுங்கில் **தரப்படவில்லை. Y** நிரலில் உள்ளவற்றை **X** நிரலில் உள்ளவற்றுக்கேற்ப சரியாக ஒழுங்குபடுத்தும்போது கீழே தரப்பட்டுள்ள ஐந்து சேர்மானங்களுள் ஒன்று சரியானதாகும். சரியான சேர்மானத்தின் **இலக்கத்தைத் தெரிவுசெய்து அடைப்புக்குறியினுள்** எழுதுக.

**16.**

| X | Y |
|---|---|
| (i) பரமேஸ்வரன் | A முதலாம் இராஜராஜன் |
| (ii) மதுரைகொண்டான் | B ஹார்ஷவர்த்தனன் |
| (iii) மும்முடிச் சோழதேவன் | C இரண்டாம் புலிகேசி |
| (iv) வாதாபி கொண்டான் | D முதலாம் பராந்தகன் |
| (v) சகல உத்தராபதநாதன் | E முதலாம் நரசிம்மவர்மன் |

(1) ADCBE (2) CADEB (3) CDAEB (4) DCAEB (5) EDBAC (.........)

**17.**

| X | Y |
|---|---|
| (i) கான்வர் | A பிரதிஸ்தான் |
| (ii) சாதவாகனர் | B தஞ்சாவூர் |
| (iii) சோழர் | C மதுரை |
| (iv) பல்லவர் | D பாடலிபுத்ரம் |
| (v) பாண்டியர் | E காஞ்சி |

(1) ABDEC (2) BADCE (3) CADEB (4) DABEC (5) DBAEC (.........)

**18.**

| X | Y |
|---|---|
| (i) கோசல தேவி | A பிரசேனாஜித் |
| (ii) மல்லிகா தேவி | B பிம்பிசாரன் |
| (iii) விதிசா தேவி | C கிரகவர்மன் |
| (iv) இராஜஸ்ரீ | D அஜாதசத்ரு |
| (v) வஜிரா | E அசோகன் |

(1) ABECD (2) BAECD (3) BAEDC (4) CABED (5) DAEBC (.........)

**19.**

| X | Y |
|---|---|
| (i) ஜகோள் | A கௌதமி பாலஸ்ரீ |
| (ii) பிதரி | B கனிஷ்கர் |
| (iii) கதிகும்பா | C ஸ்கந்தகுப்தன் |
| (iv) சாரநாத் | D காரவேல |
| (v) நாஷிக் | E இரண்டாம் புலிகேசி |

(1) CEDBA (2) DCABE (3) DECAB (4) EDCBA (5) ECDBA (.........)

**20.**

| X | Y |
|---|---|
| (i) கடுங்கோன் | A பல்லவர் |
| (ii) விஜயாலயன் | B சாதவாகனர் |
| (iii) சிம்மவிஷ்ணு | C பாண்டியர் |
| (iv) தந்திதுர்க | D சோழர் |
| (v) சிமுக | E இராஷ்டிரகூடர் |

(1) ACDEB (2) CADEB (3) CDAEB (4) DCEBA (5) DECAB (.........)

- **21** தொடக்கம் **25** வரையுள்ள ஒவ்வொரு வினாவிலும் ஒரு தலைப்பின் கீழ் **ஐந்து** விடயங்கள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் **ஒன்று** உரிய தலைப்பிற்குப் **பொருந்தாதுள்ளது. அப்பொருந்தாததைத்** தெரிவுசெய்து அதன் **இலக்கத்தை அடைப்புக்குறியினுள்** எழுதுக.

**21. சிந்துவெளி நகரத் திட்டமிடல்**

(1) நகரத் திட்டமிடலும் சுகாதாரப் பராமரிப்பும் சிந்துவெளி நாகரிகத்தின் மிக முக்கியமான அம்சங்களாகும்.
(2) வீதிகளும் ஒழுங்கைகளும் திட்டமொன்றிற்கேற்ப அமைக்கப்பட்டிருந்தன.
(3) மொகஞ்சதாரோவிலும் ஹரப்பாவிலும் கட்டடங்கள் கருங்கற்களினால் கட்டப்பட்டிருந்தன.
(4) வீதிகளினதும் ஒழுங்கைகளினதும் அகலம் 9 தொடக்கம் 34 அடிகளாகக் காணப்பட்டது.
(5) முக்கியமான சிந்துவெளி நகரங்கள் கோட்டை, தாழ்நகரப் பகுதி என இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தன. (.........)

**22. அசோகன் கல்வெட்டுக்கள்**

(1) அசோகன் கல்வெட்டுக்கள் கிரேக்க, அரமிக், பிராகிருத மொழிகளில் எழுதப்பட்டிருந்தன.
(2) அசோகனின் சில கல்வெட்டுக்கள் பாரசீகத்திலும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.
(3) அரமிக், கிரேக்க, கறோஷ்டி, பிராமி ஆகிய எழுத்து வடிவங்களில் இவை எழுதப்பட்டுள்ளன.
(4) கரோஷ்டி எழுத்துக்கள் வலது புறத்திலிருந்து இடது புறமாகவும், பிராமி எழுத்துக்கள் இடது புறத்திலிருந்து வலது புறமாகவும் எழுதப்பட்டுள்ளன.
(5) கந்தகாருக்கு அண்மையில் காணப்பட்ட கல்வெட்டு கிரேக்க, அரமிக் ஆகிய இருமொழிகளிலும் எழுதப்பட்டுள்ளது. (.........)

**23. காந்தாரக்கலை**

(1) புத்தரின் சிலைகள் மனித வடிவத்தில் கல்லில் செதுக்கப்பட்டுள்ளன.
(2) காந்தாரக்கலைக்கு முன்னர் பாதச்சுவடு, போதிமரம், குடை, தர்மசக்கரம் போன்ற குறியீடுகளால் புத்தர் அடையாளப்படுத்தப்பட்டார்.
(3) அனேகமான காந்தாரக்கலை வடிவங்கள் புருஷபுரத்திலும் அதனைச் சுற்றியுள்ள பகுதிகளிலுமிருந்து கிடைக்கப்பெற்றுள்ளன.
(4) காந்தாரக்கலையானது பெருமளவில் மதுரா, அமராவதி கலை மரபுகளின் செல்வாக்கிற்கு உட்பட்டதாக நம்பப்படுகின்றது.
(5) இந்தக் கலைமரபானது “கிரேக்க-பௌத்த கலை” அல்லது “இந்தோ-ஹெலனிக் கலை” என்றும் அழைக்கப்படுகின்றது. (.........)

**24. குப்தப் பேரரசின் வீழ்ச்சி**

(1) குப்தப் பேரரசின் வீழ்ச்சி கி.பி. ஐந்தாம் நூற்றாண்டின் இறுதியுடன் ஆரம்பமாகின்றது.
(2) குப்தப் பேரரசின் வீழ்ச்சிக்கு வழிவகுத்த முக்கிய காரணி ஹுணர்களின் படையெடுப்பாகும்.
(3) உள்நாட்டுப் பிரச்சினைகள் பிராந்திய ஆட்சியாளர்கள் சுதந்திரம் பெறுவதற்கு வழிவகுத்தன.
(4) பாடலிபுத்திரம் குப்தர்களின் வீழ்ச்சியோடு தலைநகரம் என்ற முக்கியத்துவத்தை இழந்தது.
(5) குப்தப் பேரரசின் வீழ்ச்சியிலிருந்து முஸ்லிம்களின் வருகை வரையான காலப்பகுதியில் எந்த ஒரு மன்னனாலும் வட இந்தியாவை ஒன்றிணைக்க முடியவில்லை. (.........)

**25. தென் இந்தியா**

(1) தென் இந்தியாவைக் கைப்பற்றி தன் இராச்சியத்துடன் இணைத்துக் கொண்ட ஒரேயொரு வட இந்திய ஆட்சியாளன் ஹர்ஷவர்த்தனனே ஆவான்.
(2) விந்திய மலைக்குத் தெற்காக இருந்த நிலப்பகுதி தென் இந்தியா எனக் கருதப்படுகிறது.
(3) கிருஷ்ணா - துங்கபத்திரா நதிகளுக்கு வடக்காக உள்ள பகுதி தக்கணம் (டெக்கான்) எனக் குறிப்பிடப்படுகிறது.
(4) கி.பி. எட்டாம் நூற்றாண்டின் மத்தியிலிருந்து தக்கணத்தின் பெரும்பகுதி முதலில் இராஷ்டிரகூடர்களினாலும் பின்னர் சாளுக்கியர்களினாலும் ஆளப்பட்டது.
(5) பல்லவர், பாண்டியர், சோழர் ஆகியோர் இராஷ்டிரகூடர், சாளுக்கியரின் சமகால ஆட்சியாளர்களாவர். (.........)

- **26** தொடக்கம் **30** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் **(A), (B), (C), (D)** என்னும் நான்கு தெரிவுகள் தரப்பட்டுள்ளன. இவற்றுள் ஒன்று அல்லது பல சரியான விடையாகும். சரியான விடை அல்லது விடைகளைத் தெரிவுசெய்து,

**(A)** யும் **(B)** யும் மாத்திரம் சரியாயின் ........................................ **1** எனவும்
**(A)** யும் **(C)** யும் மாத்திரம் சரியாயின் ........................................ **2** எனவும்
**(B)** யும் **(C)** யும் மாத்திரம் சரியாயின் ........................................ **3** எனவும்
**(C)** யும் **(D)** யும் மாத்திரம் சரியாயின் ........................................ **4** எனவும்
வேறு விடைகளின் எண்ணிக்கை அல்லது சேர்மானங்கள் சரியாயின் .......... **5** எனவும்
**அடைப்புக்குறியினுள்** எழுதுக.

| அறிவுறுத்தல்களின் சுருக்கம் | | | | |
|---|---|---|---|---|
| **1** | **2** | **3** | **4** | **5** |
| **(A)** யும் **(B)** யும் மாத்திரம் சரி | **(A)** யும் **(C)** யும் மாத்திரம் சரி | **(B)** யும் **(C)** யும் மாத்திரம் சரி | **(C)** யும் **(D)** யும் மாத்திரம் சரி | **வேறு விடைகளின்** எண்ணிக்கை அல்லது சேர்மானங்கள் சரி |

**26. மகாபாரதம்**

(A) மகாபாரதத்தின் ஆசிரியராக வியாசர் கருதப்படுகின்றார்.
(B) இந்தக் காவியம் கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் இடையிலான முரண்பாடுகளைப் பேசுகின்றது.
(C) குருஷேத்திர யுத்தத்தில் யுதிஷ்டிரர் பெற்ற வெற்றியோடு இப்போர் முடிவடைகின்றது.
(D) பாண்டவர்கள் கி.பி. ஆறாம் நூற்றாண்டிலும் வலிமை கொண்ட இனக் குழுமமாக விளங்கினர்.

(.........)

**27. இருக்கு வேத மக்கள்**

(A) காபூலிலிருந்து கங்கைச் சமவெளி வரையிலான பரந்த பிரதேசத்தை இருக்கு வேத மக்கள் அறிந்திருந்தனர்.
(B) விந்திய மலைக்குத் தெற்கே உள்ள பிரதேசத்தையும் அவர்கள் அறிந்திருந்தனர்.
(C) கடல் பற்றி அவர்கள் அறியாதிருந்தனர்.
(D) இருக்கு வேத மக்களின் பிரதான உணவாக சோறு இருந்தது.

(.........)

**28. பாண்டியர்**

(A) இந்தியத் தீபகற்பத்தின் தென்முனையிலிருந்து கிழக்குக் கரையோரம் வரையான பகுதி பாண்டிய மன்னர்களால் ஆட்சி செய்யப்பட்டது.
(B) ஸ்ரீமாறஸ்ரீவல்லபன் எனும் பாண்டிய ஆட்சியாளன், இலங்கை அரசனையும் பல்லவ, கங்க, சோழ ஒன்றிணைந்த படையினையும் தோற்கடித்தான்.
(C) முதலாம் இராஜராஜனால் சோழப் பேரரசுடன் பல்லவ இராச்சியம் இணைக்கப்பட்டதுடன் பாண்டிய இராச்சியம் முடிவடைந்தது.
(D) பாண்டியர் இந்து மதத்தின் ஆதரவாளர்களாக இருந்தபோதும் பௌத்த மதம் அவர்களின் ஆட்சியில் செழித்து வளர்ந்தது.

(.........)

**29. பல்லவர்**

(A) சாதவாகனரின் வீழ்ச்சியின் பின்னர் தக்கணத்தில் பல்லவர் அதிகாரத்திற்கு வந்தனர்.
(B) முதலாம் மகேந்திரவர்மனின் ஆட்சிக்காலத்தில் பல்லவருக்கும் சாளுக்கியருக்கும் இடையிலான மோதல்கள் ஆரம்பமாகின.
(C) முதலாம் நரசிம்மவர்மனின் படையினர் சாளுக்கிய மன்னனான இரண்டாம் புலிகேசியைத் தோற்கடித்ததுடன் அவனைக் கொலையும் செய்தனர்.
(D) இரண்டாம் புலிகேசியின் மரணத்தின் பின்னர் சாளுக்கியரின் தலைநகரமான வாதாபி பல்லவ இராச்சியத்தின் ஒரு மாகாண நிர்வாக மையமாக மாறியது.

(.........)

**30. ஹர்ஷவர்த்தனன்**

(A) குப்தர்களுக்குப் பின்னர் வடக்கு மற்றும் தெற்கு இந்தியாவை ஒன்றிணைப்பதில் ஹர்ஷவர்த்தனன் வெற்றி கண்டான்.
(B) ஹர்ஷவர்த்தனன் கௌடா அரச குடும்பத்துடன் திருமண உறவுகளை ஏற்படுத்திக்கொண்டான்.
(C) ஹர்ஷவர்த்தனன் முதலில் தானேஸ்வரின் ஆட்சியுரிமையைப் பெற்றதுடன் கானோஜ் சிம்மாசனத்துக்கு சட்டபூர்வ வாரிசு இல்லாத நிலையில் கானோஜின் அரசுரிமையை ஏற்றுக்கொள்ளுமாறு அவன் அழைக்கப்பட்டான்.
(D) ஹர்ஷவர்த்தனன் தனது தலைநகரை தானேஸ்வரிலிருந்து கானோஜிற்கு மாற்றிக்கொண்டான்.

(.........)

● **31** தொடக்கம் **35** வரையிலுள்ள ஒவ்வொரு வினாவுக்குமுரிய சரியான விடையைத் தெரிவுசெய்து அதன் **இலக்கத்தை அடைப்புக்குறியினுள்** எழுதுக.

**31.** பாடலிபுத்திர நகரத்தின் தாபகர் யார்?
(1) பிம்பிசாரர் (2) உதயன் (3) மகா பத்மநந்தன்
(4) சந்திரகுப்த மௌரியன் (5) புஸ்யமித்ர சுங்கன் (.........)

**32.** எகிப்திய மன்னனான தொலமி பில்டல்போஸினால் மௌரிய அரச சபைக்கு அனுப்பப்பட்ட தூதுவன் யார்?
(1) டெய்மாகோஸ் (2) மெகஸ்தெனிஸ் (3) டியோடரஸ்
(4) டியோனிசியஸ் (5) அன்ரியோகஸ் (.........)

**33.** நாலந்தா பௌத்த மடாலயத்தைத் தாபித்தவராகக் கருதப்படுபவர் யார்?
(1) முதலாம் குமாரகுப்த (2) கோபால (3) தேவபால
(4) தர்மபால (5) விஷ்ணுகுப்த (.........)

**34.** சோமநாத் கோயில் எந்தக் கடவுளுக்காக அர்ப்பணிக்கப்பட்டது?
(1) விஷ்ணு (2) சிவன் (3) சூரியன்
(4) கிருஷ்ணர் (5) அக்னி (.........)

**35.** சோழப் பேரரசு எத்தனை மண்டலங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது?
(1) ஆறு (2) ஏழு (3) எட்டு
(4) பன்னிரெண்டு (5) பதினான்கு (.........)

● **36** தொடக்கம் **40** வரையுள்ள வினாக்களில் **இரண்டு** கூற்றுகள் வீதம் தரப்பட்டுள்ளன. ஒவ்வொரு வினா தொடர்பாகவும் தரப்பட்டுள்ள கூற்றுச் சோடிக்குக் கீழே உள்ள அட்டவணையில் காணப்படும் **1, 2, 3, 4, 5** என்பவற்றில் மிகவும் பொருந்துவது எதுவென்பதைத் தெரிவுசெய்து அதன் **இலக்கத்தை அடைப்புக்குறியினுள்** எழுதுக.

| | **முதலாம் கூற்று** | **இரண்டாம் கூற்று** |
|---|---|---|
| **1** | சரியானது | பிழையானது |
| **2** | சரியானது | சரியானது |
| **3** | பிழையானது | பிழையானது |
| **4** | பிழையானது | சரியானது |
| **5** | சரியானது | சரியானதும் **முதலாம்** கூற்றினை நன்றாக விளக்குவதுமாகும். |

| | **முதலாம் கூற்று** | **இரண்டாம் கூற்று** | |
|---|---|---|---|
| **36.** | அங்குத்தர நிக்காயத்தில் கி.மு. ஆறாம் நூற்றாண்டில் இந்தியாவில் பதினாறு மகாஜனபதங்கள் இருந்ததாகக் குறிப்பிடப்படுகிறது. | அப்பதினாறு மகாஜனபதங்களுள் சாக்கயாஸ், பக்காஸ், பூலி, காலமஸ், கோலியஸ், மோரியஸ், விதேகஸ், லிச்சவி ஆகிய கணராஜ்யங்கள் காணப்பட்டன. | (.........) |
| **37.** | சமண தீர்த்தங்கரரில் இறுதியானவரான மகாவீரர், பிம்பிசார மன்னரின் சம காலத்தவர் ஆவார். | கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில் வல்லபையில் சமண தீர்த்தங்கரரின் போதனைகள் எழுதப்பட்டன. | (.........) |
| **38.** | மௌரிய அரச சபையில் மகா அலெக்சாந்தரின் தூதுவராக மெகஸ்தெனிஸ் இருந்தார். | பாடலிபுரத்தின் மாநகர நிர்வாகம் ஆறு ஆணையாளர் சபைகளினால் நடத்தப்பட்டது என்று மெகஸ்தெனிஸ் குறிப்பிடுகின்றார். | (.........) |
| **39.** | அசோகன் தன் கல்வெட்டுக்களில் தன் இராச்சியத்தின் தெற்கு எல்லையில் பாண்டியர்கள் சுதந்திரமான மக்களாக இருந்தனர் என விபரிக்கின்றார். | பாண்டிய இராச்சியத்தின் தூதுக் குழுவொன்றை உரோமப் பேரரசனான ஒகஸ்ரஸ் சீசருக்கு அனுப்பியதாக ஸ்ராபோ குறிப்பிடுகின்றார். | (.........) |
| **40.** | அலகபாத் தூண் சாசனம் காலவரன் முறையில் சமுத்திரகுப்த மன்னனின் யுத்த வெற்றிகள் பற்றிய தகவல்களைத் தருகின்றது. | சமுத்திரகுப்தனால் தக்ஷிணபதத்தின் ஆட்சியாளர்கள் தோற்கடிக்கப்பட்டு, கைப்பற்றப்பட்ட பின்னர் அவர்களைத் தனது அதிகாரத்தின் கீழ் ஆட்சிபுரிவதற்கு அனுமதித்தான். | (.........) |

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்

## අ.පො.ස. (උ.පෙළ) විභාගය/ க.பொ.த. (உயர் தர)ப் பரீட்சை - 2019

### නව නිර්දේශය/ புதிய பாடத்திட்டம்

විෂය අංකය / பாட இலக்கம் **25A** විෂයය / பாடம் **இந்திய வரலாறு**

### ලකුණු දීමේ පටිපාටිය/புள்ளி வழங்கும் திட்டம்

### I පත්‍රය/பத்திரம் I

| ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. |
|---|---|---|---|---|---|---|---|
| 01. | 2 | 11. | 2 | 21. | 3 | 31. | 2 |
| 02. | 4 | 12. | 3 | 22. | 2 | 32. | 4 |
| 03. | 1 | 13. | 1 | 23. | 4 | 33. | 1 |
| 04. | 4 | 14. | 5 | 24. | 5 | 34. | 2 |
| 05. | 3 | 15. | 4 | 25. | 1 | 35. | 3 |
| 06. | 2 | 16. | 3 | 26. | 5 | 36. | 1 |
| 07. | 5 | 17. | 4 | 27. | 2 | 37. | 2 |
| 08. | 1 | 18. | 2 | 28. | 1 | 38. | 4 |
| 09. | 3 | 19. | 5 | 29. | 3 | 39. | 2 |
| 10. | 5 | 20. | 3 | 30. | 4 | 40. | 4 |

✪ විශේෂ උපදෙස්/ விசேட அறிவுறுத்தல் :

එක් පිළිතුරකට/ ஒரு சரியான விடைக்கு 01 ලකුණු බැගින්/புள்ளி வீதம்

මුළු ලකුණු/மொத்தப் புள்ளிகள் 1 × 40 = 40

නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

ඉන්දීය ඉතිහාසය II (II කොටස)
இந்திய வரலாறு II (பகுதி II)
History of India II (Part II)

25-A T II

## இந்திய வரலாறு - ஆதிகாலம் முதல் கி.பி. 1206 வரை

**அறிவுறுத்தல்கள் :**

✻ **முதலாம்** வினா கட்டாயமானது. முதலாம் வினாவுக்கும் **B, C** ஆகிய ஒவ்வொரு பகுதியிலிருந்தும் ஆகக் குறைந்தது ஒரு வினாவையேனும் தெரிவுசெய்து மேலும் **மூன்று** வினாக்களுக்கும் விடை எழுதுக. (**முதலாம்** வினாவுக்கு விடையளிப்பதற்கு **இந்திய புறவுருவப்படம்** வழங்கப்பட்டுள்ளது.)

### பகுதி A

**1.** உமக்கு வழங்கப்பட்டுள்ள புறவுருவப்படத்தில் கீழே தரப்பட்டுள்ள அனைத்து இடங்களையும் குறித்துப் பெயரிடுக.

(i) ஹரப்பா (ii) விந்திய மலை
(iii) தக்ஷீலா (iv) சுப்பராக
(v) பரோடா கணவாய் (vi) யமுனா நதி
(vii) காஞ்சி (viii) கலிங்கம்
(ix) ஐகோள் (x) பிரயாக்
(xi) தாம்ரலிப்தி (xii) உஜ்ஜயினி

*(சரியாகக் குறித்துப் பெயரிடப்படும் ஒவ்வொன்றிற்கும் **01** புள்ளி வீதமாகும்.)*

### பகுதி B

**2.** சிந்துவெளி மக்களின் சமூக, பொருளாதார, கலாசார நிலைமைகள் பற்றிப் பரிசீலனை செய்க. (16 புள்ளிகள்)

**3.** "பிந்திய வேதகாலம் ஒரு நிலைமாறும் காலப்பகுதியாகும்."

(i) பிந்திய வேதகாலக் குடியிருப்புக்கள் பிரதானமாக எந்த நதிக்கு அண்மையில் அமைந்திருந்தன? (01 புள்ளிகள்)

(ii) பிந்திய வேதகாலம் பற்றிய தகவல்களைப் பெற்றுக்கொள்ளத்தக்க மூலாதாரங்கள் **இரண்டின்** பெயர்களைக் குறிப்பிடுக. (02 புள்ளிகள்)

(iii) பிந்திய வேதகால சமுதாயத்தின் பிரதான பண்புகளை விளக்குக. (04 புள்ளிகள்)

(iv) இருக்கு வேதகாலத்தில் நிலவிய அரசியல், சமய நிலைமைகள் பிந்திய வேதகாலத்தில் மாற்றமடைந்த விதத்தைப் பரிசீலனை செய்க. (09 புள்ளிகள்)

**4.** "அசோகனின் தர்ம கொள்கையானது பௌத்த சமயத்தின் முழுமையான செல்வாக்கைக் கொண்டுள்ளது." இக்கூற்றினை நுணுக்கமாகப் பரிசீலனை செய்க. (16 புள்ளிகள்)

**5.** பின்வரும் தலைப்புகளுள் எவையேனும் **இரண்டினது** வரலாற்று முக்கியத்துவத்தைப் பரிசீலனை செய்க.

(i) வடமேற்கு எல்லைக் கணவாய்கள்

(ii) கி.மு. ஆறாம் நூற்றாண்டில் காணப்பட்ட குடியரசுகள்

(iii) நந்த வம்சம்

(iv) அர்த்தசாஸ்திரம் (08 × 2 = 16 புள்ளிகள்)

## பகுதி C

**6.** மௌரியப் பேரரசின் வீழ்ச்சிக்கும் குப்தப் பேரரசின் எழுச்சிக்கும் இடைப்பட்ட காலப்பகுதியில் வடமேற்கு இந்தியாவில் அரசியல், கலாசாரத் துறைகளில் பல்வேறு வெளிநாட்டுப் படையெடுப்பாளர்களின் பங்களிப்பைப் பரிசீலனை செய்க. (16 புள்ளிகள்)

**7.** "இரண்டாம் சந்திரகுப்தன் ஆட்சிக் காலத்திலே குப்தப் பேரரசின் ஆதிக்கம் அதன் உச்ச நிலையை அடைந்தது."

(i) இரண்டாம் சந்திரகுப்தன் ஆட்சிக் காலத்திலே இந்தியாவிற்கு வருகை தந்த புகழ் பெற்ற யாத்திரிகரான சீனத்துறவியின் பெயரைக் குறிப்பிடுக. (01 புள்ளிகள்)

(ii) இரண்டாம் சந்திரகுப்தன் பயன்படுத்திய **இரண்டு** விருதுப் பெயர்களைக் குறிப்பிடுக. (02 புள்ளிகள்)

(iii) இரண்டாம் சந்திரகுப்தன் தனது அரசியல் அதிகாரத்தை விரிவுபடுத்துவதற்காக மேற்கொண்ட திருமண உறவுகள் பற்றிச் சுருக்கமாகக் குறிப்பிடுக. (03 புள்ளிகள்)

(iv) குப்தப் பேரரசின் விரிவாக்கத்திற்காக இரண்டாம் சந்திரகுப்தன் மேற்கொண்ட நடவடிக்கைகள் பற்றிப் பரிசீலனை செய்க. (10 புள்ளிகள்)

**8.** பின்வரும் தலைப்புக்களில் பால வம்சத்தின் முக்கியத்துவத்தை விளக்குக.

(i) வங்காளத்தில் ஓர் இராச்சியத்தை ஏற்படுத்தியமையும் அதன் விரிவாக்கமும்

(ii) பால வம்சத்தினரின் ஆட்சியில் ஏற்பட்ட சமய, கலாசார அபிவிருத்திகள் (16 புள்ளிகள்)

**9.** பின்வரும் தலைப்புக்களில் எவையேனும் **இரண்டினது** வரலாற்று முக்கியத்துவம் தொடர்பாகச் சிறுகுறிப்பு எழுதுக.

(i) அலகபாத் மெய்க்கீர்த்தி

(ii) இரண்டாம் புலிகேசியின் ஆட்சியில் சாளுக்கிய அதிகார விரிவாக்கம்

(iii) முதலாம் இராஜேந்திரனின் ஆட்சியில் இடம்பெற்ற சோழர்களின் அதிகாரப் பரவல்

(iv) அராபிய, துருக்கியப் படையெடுப்புக்கள் (08 × 2 = 16 புள்ளிகள்)

* * *

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

ඉන්දීය ඉතිහාසය II
இந்திய வரலாறு II
History of India II
25A T

ප්‍රශ්න අංකය / வினா இல. / Question No. 1

විභාග අංකය / சுட்டெண் / Index No. ....................................



# இந்தியா வரலாறு

# இந்திய வரலாறு - ஆதிகாலம் முதல் கி.பி.1206 வரை

**அறிவுறுத்தல்கள் :**

- முதலாம் வினா கட்டாயமானது. முதலாம் வினாவுக்கும், ஏனைய B,C பகுதிகளிலிருந்து ஆகக் குறைந்தது ஒரு வினாவையேனும் தெரிவு செய்து மேலும் மூன்று வினாக்களுக்கும் விடையளிக்குக.
(மொத்தம் நான்கு வினாக்கள்)

**(1) உங்களுக்கு வழங்கப்பட்டுள்ள இந்தியப் புற உருவப்படத்தில் கீழ் குறிப்பிடப்பட்டுள்ள சகல இடங்களையும் குறித்துப் பெயரிடுக.**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (i) | ஹரப்பா | (ii) | விந்திய மலை | (iii) | தக்சிலா |
| (iv) | சுப்பாரக | (v) | பரோடா கணவாய் | (vi) | யமுனா நதி |
| (vii) | காஞ்சி | (viii) | கலிங்கம் | (ix) | ஐகோள் |
| (x) | பிரயாக் | (xi) | தாம்ரலிப்தி | (xii) | உஜ்ஜயினி |

**(சரியாகக் குறித்துப் பெயரிட்டால் 1 புள்ளி வீதம் வழங்கல் வேண்டும்)**

**(2) சிந்து வெளி மக்களின் சமூக, பொருளாதார, கலாசார நிலைமைகள் பற்றி பரீசீலனை செய்க.**

**சமூகம்**

- சிந்துவெளி நாகரிக மக்களின் சமுக, பொருளாதார நிலைமைகளை அறிந்து கொள்வதற்கு தொல்பொருள் சான்றுகள் துணைபுரிகின்றன. அதேபோல் நகர நாகரிகங்களிலிருந்து கிடைக்கும் தடயங்களும் இதனைத் தெளிவு படுத்துகின்றது.

- புரோட்டோ ஒஸ்ரலொயிட், மங்கோலிய, மத்தியதரை ,எல்பைன் ஆகிய கலப்பு இனக்குழுக்களை கொண்ட மக்கள் இங்கு வாழ்ந்துள்ளனர்.

- தாய்வழி சமுகமாக இருந்துள்ளது.

- வகுப்பு வேறுபாடு நிலவியுள்ளமை.

- மதகுருமார்கள், நகர தொழிலாளர்கள், வியாபாரிகள், எழுத்தாளர்கள், விவசாயிகள் போன்ற தொழிலாளர் வகுப்பை இச்சமுகம் கொண்டிருந்தது.

- சமூக அந்தஸ்த்திற்கேற்ப வாழ்க்கை முறை வேறுபட்டிருந்தது.

- மாடி வீடுகள், சிறிய வீடுகள், தொழிலாளர் வீடுகள் போன்றவற்றில் வாழ்ந்தவர்கள் தத்தமது தகுதிக்கேற்ப ஆடைஅணிகலன்களை அணிந்துள்ளனர்.

- ஆண்,பெண் இருபாலாரும் நகைகளை அணிந்துள்ளனர். (தங்கம் , வெள்ளி, வெண்கலம், செம்பு)

**பொருளாதாரம்**

- உயர்ந்த நகரப்பண்புக்கு நிகரான வளர்ச்சியடைந்த பொருளாதராம் காணப்பட்டுள்ளது.

- பிரதான ஜீவனோபாயமாக விவசாயம் திகழ்ந்துள்ளதுடன் கோதுமை, சாமை, பார்லி, மரக்கறி, பழ–வகைகள் என்பவற்றையும் பயிரிட்டுள்ளனர். விவசாயத்துக்குத் தேவையான நீர்ப்பாசன முறைகளை–யும் கையாண்டுள்ளனர்.

- ஹரப்பாவில் பாரிய தானியக் களஞ்சியம் ஒன்று கண்டறியப்பட்டுள்ளது.

- அளவை, நிறுவை உபகரணங்களைப் பயன்படுத்தியுள்ளனர்.

- அதிகளவான நகர மக்களை நிர்வாகம் செய்யுமளவு பலமான பொருளாதாரம் நிலவியுள்ளது.

- உள்நாட்டு வர்த்தகத்தில் தானிய வகை, பருத்தி, தங்கம், வெள்ளி, உலோகம் அலங்காரப்பொருட்கள் என்பன வியாபாரப் பொருட்களாக விற்கப்பட்டுள்ளன.

- ஹரப்பா, மொஹஞ்சதாரோ, ரகீகார் என்பன வியாபார நகரங்களாக இருந்துள்ளதுடன் பாரிய வீதிக் கட்டமைப்புடன் தொடர்புபட்டுள்ளன.

- லோத்தால், சுத்கஜெந்தோர் முதலியன துறைமுகங்கள் வர்த்தகத்தில் ஈடுபட்ட பிரதான துறைமுகங்கள் ஆகும்.

- மொசப்பத்தேமிய நாகரிகத்துடன் வர்த்தகத் தொடர்புகளை மேற்கொண்டிருந்தனர்.

- செங்கல், உலோகம், யானைத்தந்தம் , நூல்நூற்றல் போன்ற கைத்தொழில்களும் கலை நுணுக்கம் வாய்ந்த சிற்பிகளும் இருந்துள்ளதற்கான ஆதாரங்கள் கிடைத்துள்ளன.

- மிருக வளர்ப்பு பிரதான பொருளாதார மூலமாக இருந்துள்ளது. இதில் மாடு பிரதான மிருகமாகவும், பன்றி, ஆடு, செம்மறி ஆடு, ஒட்டகம் என்பனவும் வீடுகளில் வளர்க்கப்பட்டுள்ளன.

- இம் மிருகங்கள் பொருள்களைக் கொண்டு செல்லவும் விவசாயத்துக்காகவும் பயன்படுத்தியுள்ளனர்.

**கலாசாரம்**

- ஆண் பெண் தெய்வ வழிபாடுகள், நீர் வழிபாடு, விருட்ச வழிபாடு, மிருக வழிபாடு என்பன நிலவியுள்ளன.

- இறந்தவர்களை நல்லடக்கம் செய்யும்போது, பின்வரும் முறைகள் கையாளப்பட்டுள்ளன.
  இறந்தவரை நல்லடக்கம் செய்தல்.
  இறந்தவரை எரித்து எஞ்சுகின்ற எலும்புகளை நல்லடக்கம் செய்தல்.
  இறந்தவரின் உடலை மிருகங்கள் உண்ட பின் எலும்பை நல்லடக்கம் செய்தல். போன்ற சடங்குகள் பேணப்பட்டுள்ளன. மயானங்கள் கிடைத்துள்ளன.

- வண்டிஓட்டுதல், விளையாடுதல், வேட்டையாடுதல், சூதாட்டம் என்பன பொழுது போக்காக இருந்துள்ளன.

- ஆண்கள் உடலின் மேல்பகுதியை ஒரு சால்வையாலும் கீழ்ப்பகுதியை ஒரு துண்டாலும் மறைத்துள்ளனர். பெண்கள் உடலின் மேல்,கீழ் இருபகுதிகளையும் நன்றாக மறைக்கும் வண்ணம் ஆடை அணிந்துள்ளனர்.

- கலை நுணுக்கம் வாய்ந்த மக்கள் வாழ்ந்துள்ளனர். ( வழிபாட்டு சிலை, பெண் உருவச் சிலை தலை இல்லா சிலை)

- எண் எழுத்து முறைகளையும் கையாண்டுள்ளனர்.

- மேற்கூறிய தகவல்கள் தொல்பொருள் சான்றுகள் மூலம் நிரூபணமாகின்றமை குறிப்பிடத்தக்கதாகும்.

**(16 புள்ளிகள்)**

3) **"பிந்திய வேதகாலம் ஒரு நிலைமாறும் காலப்பகுதியாகும்"**

(i) **பிந்திய வேதகாலக் குடியிருப்புக்கள் பிரதானமாக எந்த நதிக்கு அண்மையில் அமைந்திருந்தன?**

கங்கை / யமுனை **(1 புள்ளி)**

(ii) **பிந்திய வேதகாலம் பற்றிய தகவல்களைப் பெற்றுக் கொள்ளத்தக்க மூலாதாரங்கள் இரண்டைக் குறிப்பிடுக.**

யஜுர் வேதம், சாம வேதம், அதர்வணம், பிரமாண கிரந்தம், உபநிசதம், ஆரண்ய கிரந்தம்

**(02 புள்ளிகள்)**

(iii) **பிந்திய வேதகால சமுதாயத்தின் பிரதான பண்புகளை விளக்குக?**

- ஆரிய சமூக அமைப்பு சிக்கல்மிக்கதாக மாறியது.

- கோத்திர சமூகம் நிலையான சமுகமாக மாற்றமடைந்தமை.

- பிரதானமாக 4 வகை சாதியமைப்புக்கள் நிலவின.

- ஒவ்வொரு சாதிகளுக்கும் என வெவ்வேறான பணிகள் ஒதுக்கப்பட்டிருந்தன.
  பிராமணர் – சமயம்இகல்வி
  சத்திரியர் – அரச நிர்வாகம், போர்
  வைசிகர் – விவசாயம், வியாபாரம்
  சூத்திரர் – இழிவான தொழில்கள், மேல் சாதியினருக்கு பணிவிடை செய்தல்.

- பெண்களிற்கு சுதந்திரம் வழங்கப்படவில்லை.

- யாக, ஹோம, சோமபானம் என்பவற்றிற்கு முதலிடம் வழங்கப்பட்டமை.

- பிராமணர் சமுகத்தில் உயர்நிலை வகித்தனர்.
- பால்,நெய் பழம், கோதுமை, பார்லி என்பவற்றுடன் மீன் இறைச்சி என்பன உணவாகப் பயன்படுத்தப்பட்டன.
- ஆடை அணிகலன்கள் சில மாற்றங்களிற்குட்பட்டன.
- ஆடல், பாடல், இசை, நடனம் வண்டி ஓட்டுதல் என்பன பொழுது போக்காக காணப்பட்டன.
- முறையான கல்வி காணப்பட்டது.

**(4 புள்ளிகள்)**

(iv) **இருக்கு வேதகாலத்தில் நிலவிய அரசியல், சமய நிலைமைகள் பிந்திய வேதகாலத்தில் மாற்றமடைந்த விதத்தை பரிசீலனை செய்க.**

- இருக்குவேதத்தில் குறிப்பிடப்படும் காலம் வேதகாலம் எனவும் யசூர், சாமம், அதர்வனம், பிரஹ்மண, ஆரண்ய, உபநிடதங்களில் குறிப்பிடப்படும் காலம் பிந்திய வேதகாலம் எனவும் அழைக்கப்பட்டது.
- இருக்கு வேதகாலத்தில் அரசியல் துறையில் கோத்திர சமூகம் முதலிடம் பெற்றதுடன் ராஜா என்ற பெயரில் கோத்திரத் தலைவர் அழைக்கப்பட்டனர்.
- பலம்மிக்க கோத்திரங்களாக பரத, புரு, யத்ர, துர்வாச என்பன திகழ்ந்தன.
- பிந்திய வேதகாலத்தில் சிக்கல் மிக்க நிலையான சமூகமாக வளர்ச்சியடைந்து அதன் தலைவன் அரசன் என அழைக்கப்பட்டான்.

  சாம்ராட் – கிழக்குப்பகுதி அரசர்கள்<br>
  போஜ – தென்பகுதி அரசர்கள்<br>
  விராட் – வட பகுதி அரசர்கள்<br>
  ராஜன் – மத்திய பகுதி அரசர்கள்

- பிந்திய வேதகாலத்தில் அரசன் கடவுள் நிலையில் வைத்து மதிக்கப்பட்டான். மேலும் அரசாட்சி பரம்பரை சொத்தாக மாற்றமுற்றது.
- இருக்கு வேதகாலத்தில் இருந்த சமித்தி, சபை என்பன அவ்வாறே பிந்திய வேதகாலத்திலும் நடைமுறைப்படுத்தப்பட்டது.
- சபா– கோத்திர தலைவர்களைக் கொண்ட அமைப்பு.
- சமித்தி – சகல கோத்திரத்தாரையும் பிரதிநிதிப்படுத்தும் அமைப்பு.
- இருக்கு வேதகாலத்தில் பணியாற்றிய அதிகாரிகள் புரோகித, சேனானி, விஷ்வபதி, கிராமணி என அழைக்கப்பட்டமை.

- பிந்திய வேதகாலத்தில் அரசனுக்கு உதவிய பிரதானிகள் ரத்தீன் என அழைக்கப்பட்டனர்.

- புரோகிதன் – அரசனுக்கு ஆலோசனை வழங்கல், சேனானி – சேனாதிபதி ( படைத்தளபதி ), கிராமத்தலைவன் – கிராமணி , –சங்குறு ஹித்னு – கணக்காளர், உக்ர – பொலிஸ் அதிகாரி , கொவி கந்தன – வேட்டைக்கு உதவுதல், சார – உளவு பார்ப்போர்

- அரசனுக்குசெலுத்தவேண்டிய பங்குத்தொகைகால்நடைகளிலிருந்தும், விவசாயஉற்பத்திகளிலிருந்தும் செலுத்த வேண்டியிருந்தது.

- இருக்கு வேதகால மக்கள் இயற்கைப் பொருட்களை கடவுளாக வழிபட்டதுடன், பூலோகத்தில் ஏராளமான கடவுள்கள் இருப்பதாக நம்பினர்.

- இந்திரன், வர்ணன், மாறன், அக்னி சாவித்ரி, மித்ர, காற்று என்பன அவற்றுள் குறிப்படத்தக்கனவாகும்.

- பிந்திய வேதகாலப்பகுதியில் பல தெய்வக் கொள்கை ஏக தெய்வ கொள்கையாக மாற்றமுற்றது. இருக்கு வேத காலத்தில் எளியமுறையில் இருந்த யாக முறை, இங்கு சிக்கல்மிக்கதாக மாறியது. இதில் பிராமணர் முதல் நிலை வகித்ததுடன் இவர்கள் பூமியில் நடமாடும் கடவுளான பூசூது என தம்மை அழைத்தனர்.

- ஆரண்ய, உபநிஷத காலப்பகுதியில் பிராமணர் செல்வாக்கிற்கு எதிராக சமண மரபுகள் தோற்றம் பெறலானது.

**(9 புள்ளிகள்)**

4) **“அசோகனின் தர்மக் கொள்கையானது பௌத்த சமயத்தின் முழுமையான செல்வாக்கை கொண்டுள்ளது” இக்கூற்றினை நுணுக்கமாகப் பரிசீலனை செய்க.**

- கி.மு. 273 – 236 வரை அசோகன் ஆட்சி புரிந்தான்.

- அசோகனின் தர்மக்கொள்கை மற்றைய சகல சமயங்களிலிருந்தும் ஒன்று சேர்த்துப் பெறப்பட்டதாகும்.

- பௌத்த சமயத்தை ஏற்றபின் நாட்டு மக்களுக்கும் அதனைப் போதித்தான்.

- அசோகனின் தர்மக்கொள்கை பற்றி அறிஞர்களிடையே பல்வேறு கருத்துக்கள் நிலவுகின்றன.
  ப்லீட் , பியுலர் – அரசியல் மற்றும் பண்பாடுகளைக் கொண்ட ராஜதர்மமாகும்.
  ராதகுமுத் முகர்ஜி – சகல சமயங்களிலிருந்தும் வடித்தெடுக்கப்பட்ட தர்மமாகும்.
  B.M.பறுவா – அசோகனின் தர்மமும் பௌத்த தர்மமும் லௌகீக வாழ்வை போதிக்கும் ஒன்றாகும் எனக் குறிப்பிட்டனர்.

- அசோகனின் தர்மக் கொள்கை, பௌத்த சமயத்தின் போதனைகளிலிருந்து பெறப்பட்ட ஒன்றாகும் என பல அறிஞர்கள் குறிப்படுகின்றனர்.

- சிகாலோவாத, வியாக்க பஜ்ஜ, பராபவ, முதலிய சூத்திரங்களில் மனிதர்கள் பின்பற்றவேண்டிய ஒழுக்கங்கள் பற்றி குறிப்பிடப்பட்டுள்ளன. இவை அசோகனின் தர்மத்திலும் காணப்படுகின்றது.

- அசோகனின் தர்மப்போதனைகள் பௌத்த சமயத்தின் சாயலைக் கொண்டு காணப்படுவதை அவதானிக்கலாம்.
  சூசேத்ர – பணிவு – பெற்றோர், ஆசிரியர், மூத்தோர் மற்றும் உயர்குலத்தவர்களிடம் பணிவாக நடத்தல்.
  ஆசிதி– மரியாதை செய்தல் – மாணவர்கள் ஆசிரியர்களுக்கும், ஆசிரியர்கள் தமது ஆசிரியர்களுக்கும் மரியாதை செய்தல்.
  சம்பிரதிபத்தி – உபசரித்தல். – பிராமணர்களுக்கும், சமணர்களுக்கும், உறவினர்களுக்கும், ஊழியர்களுக்கும், வறியவருக்கும், தங்கிவாழ்வோருக்கும், நண்பர்களுக்கும், துன்பப்படுவோர்களுக்கும் உபகாரம் செய்தல்.
  தான – தானம் செய்தல் – பிராமணர், சமணர், நண்பர், உறவினர், வயோதிபர் முதலியோருக்கு தானம் வழங்குதல்.
  மிருக கொலைகளைத் தவிர்த்தல்– உயிர் உள்ள மிருகங்களைக் கொலை செய்வது வதைத்தல் என்பவற்றைத் தவிர்த்தல்.

- அசோகப் பேரரசன் நாட்டு மக்களின் நலன் கருதி,மக்கள் பின்பற்ற வேண்டிய ஒழுக்கங்கள் பற்றி ஏரா–ளமான கல்வெட்டுக்களை நிறுவியுள்ளான்.– இவை பிராமி, கிரேக்கம் , கரோஷ்டி முதலிய மொழிகளில் செதுக்கப்பட்டுள்ளன. உதாரணம் : டில்லி தோபே இரண்டாவது தூண் குறிப்பு ஆறாம் மலைக் குறிப்பு, டௌலி மலைக்குறிப்பு.

  ( மேற்குறிப்பிட்ட தகவல்களிற்கு மாறாக பௌத்த சமயத்தின் தாக்கம் அசோக தர்மத்திற்கு கிடைக்கவில்லை என சான்றுகளுடன் விடையளித்தால் அதற்கும் புள்ளிகள் வழங்குதல் வேண்டும்)

**(16 புள்ளிகள்)**

**05) கீழ்க் குறிப்பிடப்படும் தலைப்புகள் எவையேனும் இரண்டினது வரலாற்று முக்கியத்துவத்தைப் பரிசீலனை செய்க.**

(i) **வடமேற்கு எல்லைக் கணவாய்**
(ii) **கி.மு 6ம் நூற்றாண்டில் காணப்பட்ட குடியிருப்புக்கள்.**
(iii) **நந்த வம்சம்**
(iv) **அர்த்த சாஸ்த்திரம்**

**(i) வடமேற்கு எல்லைக் கணவாய்**

- ஆப்கான், சுலைமான், கிர்தார், இந்துகுஷ், மலைகளினூடே இந்தியாவின் வடமேற்கெல்லைக் கணவாய் அமைந்துள்ளது.

- இவற்றுள் போலன், கைபர், மக்ரான் முதலியன உள்ளடங்கும்.

- கைபர் மலைப் பாதை ( காபுல் நதிக்கரையோரம் முதல் பெஷாவார் வரை அமைந்திருந்தது ) மத்திய ஆசியாவின் எந்தப் பகுதிகளிலிருந்தும் ஒக்ஸஸ் பள்ளத்தாக்கு வரை இடம்பெயர்ந்தவர்கள் இந்தியாவினுள் நுழைவதற்கு இருந்த பழைய பாதையாக இது காணப்பட்டது.

- போலன் கணவாய் பாதை (கைபர் கணவாயிற்கு தெற்கிலும் சுலைமான் மலைக்கு மேற்கிலும் அமைந்துள்ளது) பாரசீகத்திலிருந்து இந்தியாவினுள் நுழைவதற்கான இலகுவான பாதையாக இருந்தது.

- மக்ரான் கணவாய் பாதை ( போலன் கணவாயிலிருந்து 300 மைல்களிற்கு தெற்கே கிர்தார் மலை மற்றும் அரபிக் கடல் இரண்டிற்கும் இடையில் அமைந்துள்ளது)

- ஹேராத் கணவாய் (ஆப்கான் மலைத்தொடர் முதல் சிந்து நதிக்கரை வரை பரந்துள்ளது)

- இவற்றுள் போலன், கைபர் இரண்டும் முக்கியமானது.

- மத்திய ஆசியாவிற்கும், தென்னாசியாவிற்கும் இடையில் உள்ள வர்த்தகப் பாதையின் முக்கிய இடத்தில் அமைந்துள்ளது.

- முதலாம் டேரியஸ், அலெக்ஸாண்டர், செங்கிஸ்கான் போன்றோர் தமது போர் நடவடிக்கைளின்போது கைபர் கணவாயையப் பயன்படுத்தியுள்ளனர்.

- இந்திய வரலாறு முழுவதிலும் கைபர் கணவாய் முக்கியத்துவம் பெறுகிறது. கஜினி முஹம்மத், பாபர் முதலானோர் இக்கணவாய் வழியாகவே இந்தியாவை வந்தடைந்தனர்.

- ஆப்கான் பகுதியிலிருந்து இடம்பெற்ற தாக்குதல்கள் போலன் கணவாய் ஊடாகவே இடம் பெற்றது.

- சக இனத்தவர் இக்கணவாய் வழியாகவே இந்தியாவினுள் நுழைந்தனர்.

- இப்பகுதிகளின் பாதுகாப்பிற்காக குர்தி கோத்திரத்தார் நிறுத்தப்பட்டிருந்தனர்.

- கூர்கி முஹம்மட் போலான் கணவாய் வழியாக வந்தான்.

- ஆப்கானிஸ்தான் மற்றும் மத்தியாசியா பகுதி வியாபாரிகள் போலன் கணவாய் வழியாகவே வந்தனர்.

- அலெக்சாண்டர் திரும்பிச்செல்கையில் மக்ரான் வழியாகவே சென்றான். இது இடர் நிறைந்த கணவாய் ஆகும்.

- பல்வேறு இனக்குழுக்களும் வடமேற்கெல்லைக் கணவாய் வழியாகவே இந்தியாவை வந்தடைந்தனர். (ஆரம்பக் குடியிருப்பாளர் முதல் முகலாயர் வரை)

**(8 புள்ளிகள்)**

(ii) **கி.மு ஆறாம் நூற்றாண்டில் காணப்பட்ட அரசுகள்**

- கி.மு. ஆறாம் நூற்றாண்டில் வடஇந்தியாவின் அரசியல் நிலை பற்றிய தகவல்கள், பௌத்த, ஜைன, பிராமண நூல்களில் காணப்படுகின்றன.

- இதற்கிணங்க 16 பெருங் குடியிருப்புக்கள் காணப்பட்டுள்ளன.

- இப் 16 பெருங் குடியரசுகளிலும் இருவகையான ஆட்சி முறை இடம் பெற்றுள்ளது. (அரசாட்சி, மக்களாட்சி)

- மக்களாட்சி முறை (கண ராஜ்ய நிர்வகமாகும்)

- மக்களாட்சி அரசுகளில் வஜ்ஜி, மல்ல முதலியன சிறப்பிடம் பெறும் அரசுகளாகும்.

- பௌத்த இலக்கியங்களில் கண அரசுகள் 09 பற்றி குறிப்பிடப்பட்டுள்ளது.

  கபிலவஸ்த்து – சாக்கியன்
  வைசாலி – லிச்சவீகள்
  மிதிலை – வீதேகயன்
  ராமகிராம – கோலியர்
  குசிநாரா – பாவாஹி மல்லயன்
  அல்லகப்ப – பூலிவர்
  கேசபுத்த – காலாமயன்
  பிப்பிலிவனயே – மோரியர்
  சுங்சு மாரகிரியில் – பக்கயன்

- இவற்றுள் அரச பிரதானிகள் கணபதி, கண, சேஸ்ட மற்றும் கணராஜன் ஆகிய பெயர்களில் அழைக்கப்பட்டனர்.

- மக்களாட்சி அரசில், நிர்வாகம் பல பிரதி நிதிகளைக் கொண்ட சபை ஒன்றின் மூலம் மேற்கொள்ளப்பட்டது.

- லிச்சவி மக்களாட்சி அரசில் – 7707 அரசர்கள் இருந்ததாக பௌத்த நூல்களில் குறிப்பிடப்பட்டுள்ளன.

- லிச்சவியர் ஒன்று கூடிய இடம் "சந்தாகார சாலாவ" எனப்பட்டது.

- அரச நிர்வாகம் ஏழுவகையான தர்மத்தின் கீழ் மேற்கொள்ளப்பட்டுள்ளது.

- புத்த பெருமான் வஜ்ஜி அரசின் தர்ம நிர்வாகத்தை புகழ்ந்துள்ளார்.

- சந்திரகுப்த மௌரியன் இக்கண அரசுகளை முழுமையாக இல்லாது செய்தான்.

**(8 புள்ளிகள்)**

(iii) **நந்த வம்சம்**

- சிசு நாக அரச வம்சத்தின் பின் மகதத்தின் அதிகாரத்தை நந்தர்கள் பெற்றுக்கொண்டனர்.

- இவர்கள் சிசு நாக வம்சத்தினரிடம் இருந்து அரசை அபகரித்துக் கொண்ட பிறப்பில் தாழ்ந்த குலத்தைச் சேர்ந்த திருடர்கள் என பௌத்த குறிப்புக்களில் குறிப்பிடப்பட்டுள்ளன.

- சத்திரியர்கள் அல்லாத அரச வம்சத்தில் முதலானவர்கள் எனக் குறிப்பிடப்படுகின்றனர்.

- நந்தர்கள் 9 பேர் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளன.

- மகா பத்மநந்தன் ஆரம்ப அரசனாவான்.

- மகாபோதி வம்சத்தில், உக்க சேன நந்த (மகா பத்ம நந்த பண்டுகனதி நந்த பூதபால நந்த, ரட்ட பால நந்த, கொவிசானக நந்த, தளசித்திக நந்த, கேவட்ட நந்த, தன நந்த)

- மகா பத்ம நந்தனின் காலத்தில் விந்திய மலையின் தென்பகுதி வரை ஆட்சி பரவியிருந்தது. காரவேலு வின் ஹத்தாவும்பா குறிப்பில் கலிங்கத்தில் நீர்ப்பாசன பணிகளை மகா பத்ம நந்தன் மேற்கொண்டதாக குறிப்பிடப்பட்டுள்ளது.

- கி.மு. 327 இல் அலெக்சாண்டர் வடமேற்கு இந்தியாவை ஆக்கிரமித்த போது, கிழக்கு இந்தியாவில் நந்தர்கள் பலமான அரசொன்றை நிறுவி இருந்தனர். இதனால் கிழக்குப் பகுதியை அலெக்சாண்டரால் ஆக்கிரமிக்க முடியவில்லை.

- நந்தர்களின் இறுதி அரசனான தனநந்தனிடம் பலமிக்க படையணி ஒன்று இருந்ததாக கிரேக்க குறிப்புக்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. 200000 காலாட்படை, 3000 யானைப்படை, 20000 குதிரைப்படை, 2000 தேர்ப்படை இவனிடம் இருந்துள்ளது. இவன் மக்களை வருத்தி வரி அறவிட்டதாகவும் செல்வத்தை சேகரிக்க பல வழிகளைக் கையாண்டதாகவும் குறிப்பிடப்படுகின்றது.

- கி.மு. 321 சந்திர குப்த மௌரியன் மகதத்தின் ஆட்சிப் பொறுப்பை ஏற்றதும் நந்த வம்ச ஆட்சி முடிவுற்றது.

**(8 புள்ளிகள்)**

(iv) **அர்த்த சாஸ்த்திரம்**

- சந்திர குப்த மௌரியனின் அமைச்சனும், புரோகிதனுமான கௌடில்யனினால் எழுதப்பட்ட நூலே அர்த்தசாஸ்த்திரமாகும்.

- இது அரசியல் முறைகளைக் கொண்ட நூலாகும்.

- இந்திய வரலாற்று நிகழ்வுகள் பலதைக் கொண்டுள்ளது

- குப்தர் காலத்தில் எழுதப்பட்டுள்ளது.

- இதில் அரசாட்சி, அரசனின் கடமை, பொறுப்புக்கள், அமைச்சரவை, நீதிமன்றம், பிராந்திய நிர்வாகம், அரசனின் வருமானம், சலுகை, பல்வேறு வகுப்புக்கள் பற்றிய தகவல்கள் குறிப்பிடப்பட்டுள்ளன.

- இந்தியாவைப் போன்று இலங்கை நிர்வாகிகளும் (1ம் பராக்கிரமபாகு) அரசியல் வழிகாட்டி நூலாக இதைப் பயன்படுத்தியுள்ளனர்.

- அரசியல் தகவல்கள் மாத்திரமன்றி, சமூக, பொருளாதார தகவல்களும் இதில் இடம்பெற்றுள்ளது.

**(8 புள்ளிகள்)**

# C பகுதி

**06) மௌரியப் பேரரசின் வீழ்ச்சிக்கும் குப்தப் பேரரசின் எழுச்சிக்கும் இடைப்பட்ட காலப்பகுதியில் வடமேற்கு இந்தியாவின் அரசியல் கலாசாரத் துறைகளில் பல்வேறு வெளிநாட்டு படையெடுப்பாளர்களின் பங்களிப்பைப் பரிசீலனை செய்க.**

- மௌரியப் பேரரசின் வீழ்ச்சியின் பின்னர் மூன்று நூற்றாண்டுகளாக வட மேற்கு இந்தியாவில் பல்வேறு கோத்திரங்களின் ஆதிக்கம் ஏற்படலானது.

- இந்து கிரேக்க (யவன) பாத்தியர்கள் (பஹ்லவி) சக (சித்தியர்கள்) குசாணர் போன்ற வெளிநாட்டு அரச பரப்பரையினர் இடைக்கிடை வடமேற்கு கணவாய்களினூடாக வந்து அதிகாரத்தைச் செலுத்தினர்.

**இந்தோ - கிரேக்கர் (யவனர்)**

- மௌரியப் பேரரசின் இறுதிப்பகுதியில் கிரேக்கர்கள் இடைக்கிடையே இந்தியாவுக்கு வருகை தந்ததுடன், மௌரியரின் பிற்பட்ட காலத்தில் இந்தியாவில் நிலவிய அரசியல் பலவீனத்தைப் பயன்படுத்தி, இவர்கள் இந்தியாவை ஆக்கிரமித்தனர்.

- சிரியாவின் அன்டியோகஸ் மன்னன், இந்துகுஷ் மலையைத் தாண்டி காபுல் பள்ளத்தாக்கில் நுழைந்து சுபகசேன அரசனிடம் கப்பமாக யானைப்படையொன்றைப் பெற்றதுடன் பஞ்சாப் மற்றும் மேற்கு இந்தியப் பகுதிகள் சிலவற்றைக் கைப்பற்றினர்.

- டிமெட்ரியஸ் பாஞ்சால, சாகல பகுதிகளைக் கைப்பற்றினான்.

- மினென்டர் இந்தியாவின் பெரும்பாலான பகுதிகளைத் தாக்கி கைப்பற்றினான். இவன் சியல் கோட்டைத் தலைநகராக்கியதுடன் கங்கை நதி முதல் ஒக்சஸ் நதிக்கரை வரையும் இமயமலையிலிருந்து நர்மதா நதிவரையும் அதிகாரத்தை விரிவாக்கினான்.

- மினென்டரின் பின் கிரேக்கர் ஆதிக்கம் வீழ்ச்சி கண்டதுடன் இறுதி ஆட்சியாளனான ஹர்மையோஸ் மித்ரடேடஸ் எனும் பாரசீக அரசனால் தோற்கடிக்கப்பட்டான்.

- மினென்டர், பௌத்த சமயத்தை ஆதரித்துள்ளான்.

- மினென்டர் அரசனுடைய ஏராளமான நாணயங்கள் கிடைத்துள்ளன.
  (தக்சீலா,பெஷாவர்,ராவல்பிண்டி)

**சகார்கள் - (சித்தியர்கள்)**

- மத்தியாசியாவின் இடம்பெயர் கோத்திரமான இவர்கள் பற்றிய தகவல்கள் கிரேக்க ரோம குறிப்புகளிலும், சீன குறிப்புக்களிலும் இவர்களின் நாணயங்கள் மூலமும் அறிந்து கொள்ள முடியும்.

- போலான் கணவாய் வழியாக இந்தியாவில் நுழைந்த இவர்கள் கி.மு 1ம், 2ம் நூற்றாண்டுகளில் வடமேற்கு இந்தியாவில் தமது அதிகாரத்தை ஏற்படுத்தினர்.

- ஆரம்ப அரசனான மாமுஸ் தக்சிலாவை தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்துள்ளான். (பஞ்சாப், காந்தார, மதுரா)

- சகார்கள் தமது நிர்வாக பகுதிகளை **சத்ரப** என அலகுகளாகப் பிரித்து நிர்வாகம் செய்தனர்.

- சகார்களில் பலமிக்க அரசனான நகபான மால்வா வரை தனது அதிகாரத்தை ஏற்படுத்தி இருந்தான்.

- சிரேஷ்ட அரசனாக ருத்ராமன் அரசன் திகழ்கின்றான் இவனது ஜுனாகாத் கல்வெட்டுக் குறிப்பின் படி சாதவாகனர்களை இரண்டு முறை தோற்கடித்து மால்வா, கதியவார்,குஜராட்,மார்வார், வட கொன்கானா, சிந்து நதிக்கரை வரை அதிகாரத்தை ஏற்படுத்தினான். இவனின் பின் சகா ஆதிக்கம் வீழ்ச்சி கண்டது.

- இவர்கள் மேற்கு நாடுகளுடன் வர்த்தக உறவுகளைப் பேணியுள்ளனர்.

**பாக்தீயர் (பஹ்லவ)**

- வடமேற்கு இந்தியாவில் பலம் பெற்றிருந்த சாகர்களைத் தோற்கடித்து தக்சீலாவை மையமாகக் கொண்டு ஆட்சி செய்தனர்.

- மித்ரடேட்ஸ் சிந்து நதிக்கரை வரை அதிகாரத்தைப் பரப்பினான்.

- வடமேற்கு இந்தியாவில் ஆதிக்கம் செலுத்திய முதலாவது பிராந்திய அரசன் கொண்டபர்னீஸ் ஆவான். இவனின் பின் பலவீனமடைந்த பிராந்திய அரசை குசானர்கள் கைப்பற்றிக் கொண்டனர்.

**குசாணர்கள்**

- சீன துர்கிஸ்தானிலிருந்து வந்த இவர்கள் யூ.ஏ.வி என்ற கோத்திரத்தை சேர்ந்தவர்களாவர்.

- குசாணரின் முதலாவது அரசன் குஜ/ல கெட்பைசிஸ் வடமேற்கு இந்தியாவைக் கைப்பற்றினான்.

- வீமா கெட்பைசிஸ், தக்சீலா, பஞ்சாப் கந்தகார், காபுல் மதுரா போன்ற பகுதிகளைக் கைப்பற்றினான். இவன் “சர்வலோக ஈஸ்வர” “மகேஸ்வர” முதலிய பட்டப் பெயர்களைச் சூடியுள்ளான்.

- குசாணர்களில் சிரேஷ்ட மன்னனாக கனிஸ்க மன்னன் திகழ்கிறான். இவன் காந்தாரத்தில் புருஷ புரத்தை (பெஷாவார்) தலைநகராகக் கொண்டு பேரரசை ஏற்படுத்தினான்.

- இவன் கைப்பற்றிய பகுதிகள் பற்றி இவனது நாணயம் மற்றும் குறிப்புகள் சான்று பகர்கின்றன. (காஷ்மீர், ராஜபுதான, மால்வா, உத்தர பிரதேசம், சிராவஸ்தி, கதியவார்)

- கிழக்கு இந்தியாவின் வங்காளம், ஒரிஸ்ஸா, பீகார், நேபாளம், வாரணாசி வரை அரசை விஸ்தரித்தான்.

- ஆப்கானிஸ்தான், மத்தியாசியாவின் யார்க்காண்ட் கெஸ்கார், கோடான் வரை ஆட்சி பரவி இருந்தது.

- இந்தியாவின் மேற்குப்பகுதிக்கும் அதிகாரம் பரவி இருந்தது.

- கனிஸ்கனின் பின்னர் வாசிஸ்க, ஹுவிஸ்க, வாசுதேவ முதலிய அரசர்கள் ஆட்சிபீடம் ஏறினர்.

- குசாணர்கள் வெளிநாட்டு இனத்தவராக இருந்தாலும் இந்தியாவின் கலாசார வளர்ச்சிக்கு அதிக பங்காற்றியுள்ளனர்.

- கனிஸ்கன் நான்காவது பௌத்த மாநாட்டை நடாத்தினான் இது மகாயான பௌத்தத்தின் எழுச்சிக்கு வழிகோலியது.

- மத்திய. கிழக்காசிய நாடுகளிற்கு மகாயான பௌத்தம் பரவியது.(சீனா, ஜப்பான், கொரியா)

- பௌத்த மதத்துடன் இணைந்த வியாபார நடவடிக்கை இடம்பெற்றமை இந்திய கலாசாரம் பிற நாடுகளினும் பரவுவதற்கு வழிகோலியது.

- இலக்கியத்துறை வளர்ச்சியடைந்தது. அஷ்வகோச, வசுமித்ர, பார்சவ, நாகர்ஜ/ன சங்கரக்கித முதலிய பிக்குகளின் இலக்கியப் பணியால் புத்த சரிதம், சூத்ரலங்கார, சாரிபுத்ர, சௌந்தராநந்த முதலிய காவியங்கள் தோற்றம் பெற்றன.

- காந்தாரப் பகுதியை மையமாகக் கொண்டு கிரேக்க சாயலைப் பெற்ற கலையும், மதுரையை மையமாகக் கொண்டு சுதேச கலைமரபும் என இரு வகை மரபுகள் தோன்றின. புத்த உருவச் சிலைகள் உருவாக்கப்பட்டன.

- பௌத்த கட்டிடங்கள் நிர்மானிக்கப்பட்டன. (விகாராராம தூபி, பெஷாவர் தாது கோபுரம்)

**(16 புள்ளிகள்)**

**7) "இரண்டாம் சந்திர குப்தனின் ஆட்சிக்காலத்திலேயே குப்தப் பேரரசின் ஆதிக்கம் உச்ச நிலையை அடைந்தது."**

**(i) இரண்டாம் சந்திர குப்தனின்ஆட்சிக் காலத்திலே இந்தியாவுக்கு வருகை தந்த புகழ் பெற்ற யாத்திரிகரான சீனத்துறவியின் பெயரைக் குறிப்பிடுக.**

அலஹபாத் தூண் கல்வெட்டு **(1 புள்ளி)**

**(ii)இரண்டாம் சந்திரகுப்தன் பயன்படுத்திய இரண்டு விருதுப் பெயர்களைக் குறிப்பிடுக.**

தேவகுப்த, தேவராஜ, தேவஸ்ரீ, பரம பட்டாரக **(2 புள்ளிகள்)**

**(iii)இரண்டாம் சந்திரகுப்தன் தனது அரசியல் அதிகாரத்தை விரிவுபடுத்துவதற்காக மேற்கொண்ட திருமண உறவுகள் பற்றிச் சுருக்கமாக விளக்குக.**

- அரசன் தனது மகளான பிரபாவதி குப்தா இளவரசியை வாகாடக அரசன் இரண்டாம் ருத்ர சேனனுக்கு விவாகம் செய்து கொடுத்து அப்பகுதிகளில் அதிகாரத்தை ஏற்படுத்தியமை.

- நாகவம்ச குபேரநாகவை திருமணம் செய்து அப்பகுதிகளில் தமது அதிகாரத்தை ஏற்படுத்தியமை.
- குந்தலைக் கதம்ப இளவரசியை விவாகம் செய்து அப்பகுதியை இணைத்துக் கொண்டமை.

**(3 புள்ளிகள்)**

**(iv) குப்தப் பேரரசின் விரிவாக்கத்திற்காக இரண்டாம் சந்திர குப்தன் மேற்கொண்ட நடவடிக்கைகள் பற்றிப் பரிசீலனை செய்க?**

- மால்வா குஜராத், சௌராஷ்ட்ரா, கதியவார் பகுதிகளில் இருந்த சத்ரபர்களுக்கு எதிராக போரிட்டமை.
- இப் போர்களால் உஜ்ஜைன் அரசன் மகாசக சத்ரப இரண்டாம் சிங்கனை தோற்கடித்து அப்பகுதியை இணைத்தமை.
- மேற்குப்பகுதியில் இருந்த புறோச், கெம்போ, சொப்பாரா முதலிய துறைமுகங்களை கைப்பற்றி உலகின்பல நாடுகளுடன் தொடர்பை மேற்கொள்ள முடிந்தமை.
- வங்காளத்தின் வங்க வம்ச தலைவர்களுக்கு எதிராக செயற்பட்டமை.
- சப்தசிந்துப் பகுதியில் இருந்த வாஹ்லியனைத் தோற்கடித்தமை.

**(8 புள்ளிகள்)**

**08) கன்னோஜியின் மேலாதிக்கத்திற்காக மன்னன் ஹர்ஷவர்தனனின் ஆட்சியின் பின்னர் ஏற்பட்ட போராட்டத்தை விவரிக்குக?**

**(i) வங்காளத்தில் ஓர் இராச்சியத்தை ஏற்படுத்தியமையும் அதன் விரிவாக்கமும்.**

**(ii) பால வம்சத்தினரின் ஆட்சியில் ஏற்பட்ட சமய கலாசார அபிவிருத்திகள்.**

**(i) வங்காளத்தில் ஓர் இராச்சியத்தை ஏற்படுத்தியமையும் அதன் விரிவாக்கமும்**

- சசங்கனின் பின் வங்காளத்தில் அரசஆட்சி பலவீனமடைந்து சிற்றரசுகள் பல தோற்றம் பெற்றன.
- வங்காளத்தில் மீண்டும் அரசியல் உறுதிநிலை பாலவம்ச அரசர்களால் ஏற்படுத்தப்பட்டது.
- கோபால, மஹீபால, தர்மபால, தேவபால முதலியோர் பாலவம்சத்தின் சிரேஷ்ட ஆட்சியாளர்களாவர்.
- பிரதானிகள் கோபாலனை ஆட்சியில் அமர்த்தியதும் அவன் வங்காளம் முழுவதையும் கைப்பற்றி தனது ஆட்சி எல்லையை விரிவாக்கினான்.
- கோபாலனின் மறைவின் பின் ஆட்சிக்கு வந்த தர்மபால அரசன் பாலவம்சத்தின் சிரேஷ்ட ஆட்சியாளனாக கருதப்படுகின்றான்.

- குர்ஜர பிரதிகார, ராஷ்டகூட அரசர்களுடன் இடம்பெற்ற போர்களில் அரசன் தோல்வி அடைந்தாலும் வெற்றி பெற்றவர்கள் எதிர்கொண்ட பிரச்சினையைப் பயன்படுத்தி தர்மபாலன் இறுதியில் வெற்றிபெற்றான்.

- கானோஜை தோற்கடித்து அதன் அரசன் இந்திராயுதனை பதவிநீக்கி சக்கிராயுத இளவரசனை ஆட்சியில் அமர்த்தினான்.
- வடஇந்திய அரசர்களில் பலர் மறைமுகமாக தர்மபாலனின் ஆட்சியை ஏற்றிருந்தனர். (போஜ,மத்ச,குரு,அவந்தி)

- பரமேஷ்வர பரமபட்டாரக, மகாராசாதிராஜ முதலிய பட்டப் பெயர்களை தர்மபாலன் சூடிக் கொண்டான்.

- இவனின் பின் இவனது மகன் தேவபாலன் ஆட்சிக்குவந்தான்.

- இவனும் அரசாட்சியை விஸ்தரிக்க நடவடிக்கை மேற்கொண்டான்.

- விந்தியமலை, காம்போஜம் வரை ஆட்சியை விரிவுபடுத்தினான்.

- ஹூணர்களைத் தோற்கடித்தான்.

- தேவபாலனின் பின் பலவீனமான அரசர்கள் பலர் ஆட்சிசெய்ததன் பின் மஹீபால அரசன் வங்காளத்தில் மீண்டும் பலமான ஆட்சியை நிறுவினான். இவனின் பின் மீண்டும் வங்காளத்தின் ஆட்சி பலவீனமடைந்தது.

**(ii)பால வம்சத்தினரின் ஆட்சியில் ஏற்பட்ட சமய, கலாசார அபிவிருத்திகள்**

- பாலஅரசர்கள் பௌத்த சமயத்தை ஆதரித்தனர். (திபெத் குறிப்பின்படி தர்மபாலன் பௌத்த சமயத்துக்கு அதிக ஆதரவளித்துள்ளான்)

- கல்வி நிலையங்களை ஏற்படுத்தியமை. (தர்மபாலன், விக்ரமசிலா, ஒதந்தபுர்,உட்பட புத்த தர்மத்தைக் கற்பதற்கு 50க்கும் அதிகமான கட்டிடங்களை நிறுவியுள்ளான்.

- பௌத்த விகாரைகள் நிறுவியமை(சோமபுர் விகாரை)

- வெளிநாட்டு, பௌத்த அரசுகளுடன் தொடர்பைப் பேணியமை. (சுமாத்திராவின் சைலேந்திர அரச வம்சம்)

- சுமாத்ராவின் சைலேந்திர அரசனான பாலதேவனின் மகன், நாளந்தா விகாரைக்கு அன்பளிப்புக்கள் வழங்கியுள்ளான்.

- மகாயான பௌத்த எழுத்தாளரான ஹரிபத்ரவுக்கு ஆதரவு வழங்கியமை.

- கலைத்துறை வளரச்சிக்கு உதவியமை.

**(16 புள்ளிகள்)**

**09) பின்வரும் தலைப்புக்களில் எவையேனும் இரண்டினது வரலாற்று முக்கியத்துவம் தொடர்பாகச் சிறு குறிப்பு எழுதுக.**

(i) **அலகபாத் மெய்க்கீர்த்தி**

(ii) **இரண்டாம் புலிகேசியின் ஆட்சியில் சாளுக்கிய அதிகார விரிவாக்கம்.**

(iii) **முதலாம் இராஜேந்திரனின் ஆட்சியில் இடம்பெற்ற சோழர்களின் அதிகாரப் பரவல்**

(iv) **அரேபிய, துருக்கிய படையெடுப்புக்கள்.**

(i) **அலகபாத் மெய்க்கீர்த்தி**

- குப்தர் காலத்துக்குரிய சமஸ்கிருத மொழியில் பொறிக்கப்பட்ட மிகமுக்கிய குறிப்பாகும்.
- இது அலகாபாத் தூண் கல்வெட்டு எனப்படுகின்றது.
- சமுத்திரகுப்த அரசனின் அமைச்சராகவும் அரசவகைக் கவிஞராகவும் இருந்த ஹரிசேனாவினால் இது உருவாக்கப்பட்டது.
- இதன் சில பகுதிகள் கவிதை வடிவிலும் சில பகுதிகள் காவிய வடிவிலும் காணப்படுகின்றன.
- இது புகழ்மாலை என்பதால் அதிக வர்ணனைகளைக் கொண்டது.
- இதில் சமுத்திர குப்தனின் யுத்த வெற்றிகள் மற்றும் அவனது ஆட்சிக்காலத்தின் சிறப்பு பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது.
- இக்குறிப்பில் சிதைந்து போயுள்ள பகுதிகளை விளங்குவது கடினமாகும்.
- முதலாம் சந்திரகுப்தன் தனது மகனை சமுத்திர குப்த அரசன் எனப்பெயரிட்டு முடி சூட்டியமை பற்றியும்.
- உறவினர்களை வெற்றி கொண்ட முறை.
- சமுத்திர குப்தனின் போர் நடவடிக்கைகள்.
- ஆரிய வர்தத்தில் 9 அரசுகளை வெற்றி கொண்டமை.
- அடவிசு அரசுகளை வெற்றி கொண்டமை
- தென் பகுதி பாரத ஆக்கிரமிப்பு(12 அரசர்களைத் தோற்கடித்தமை)
- பிராந்திய அரசுகள், கண அரசுகள் என்பவற்றை கைப்பற்றுதல்
- சமுத்திர குப்தனை ஆதரித்த உள்நாட்டு வெளிநாட்டு அரசுகள் பற்றி குறிப்பிடப்பட்டுள்ளமை
- சமுத்திர குப்தன் 100 போர்களை வென்ற வீரனாகக் குறிப்பிடப்பட்டுள்ளமை
- சமுத்திரகுப்தன் கவிஞனாகவும், இசைஞானியாகவும் குறிப்பிடப்பட்டுள்ளமை.

- இம்மெய்க்கீர்த்தியில் சமுத்திர குப்தனின் சமகாலத்தில் இருந்த அரசுகள் அவற்றில் வாழ்ந்த கோத்திரத்தார் மக்களாட்சி முறை பற்றியும் குறிப்பிடப்பட்டுள்ளன.

(ii) **இரண்டாம் புலிகேசியின் ஆட்சியில் சாளுக்கிய அதிகார விரிவாக்கம்**

- இந்தியத் துணைக் கண்டத்தின் வடக்கில் நர்மதா நதி, வித்தியமலை சோட்டா நாக்பூர் மலைத்தொடர் முதலிய இயற்கை எல்லைகளையும் தெற்கில் கிருஷ்ணா, துங்கபுத்திரா நதிகளாலும் சூழப்பட்ட பகுதியே தக்கணமாகும்.
- குறிப்புகளின்படி சாளுக்கிய வம்சத்தின் ஆரம்ப ஆட்சியாளனாக முதலாம் ஜயசிங்க காணப்படுகிறான்.
- சுதந்திரமான முதலாவது அரசனாக முதலாம் புலிகேசி காணப்படுகிறான்.(கி.பி 543-556)
- இவன் பீஜாபூரின் பாதாமியை தலைநகராக்கி அதிகாரத்தை விஸ்தரித்ததாக குறிப்புகளில் இடம்பெற்றுள்ளது. (ஐகோள் குறிப்பு)
- சாளுக்கிய ஆட்சியாளர்களுள் சிரேஷ்ட மாணவனாக இரண்டாம் புலிகேசி (கி.பி.610-642) திகழ்கின்றான்.
- இவன் உள்நாட்டுக் கிளர்ச்சிகளை அடக்கி வெளிநாட்டு ஆக்கிரமிப்புக்களைத் தடுத்து ஏனைய பகுதிகளை தன்னுடன் இணைத்துக் கொண்டான்.
- வனவாசியில் - கதம்ப, தென்பகுதியில் ஆலுப, மைசூரில் - கங்க முதலிய பகுதிகளை இணைத்தான்.
- வடபகுதியில் பம்பாய்க்கு அருகில் பூரித்தீவை இணைத்தான்.
- மால்வா, குஜராத் பகுதி ஆட்சியாளர்களையும் கட்டுப்படுத்தினான்.
- வட இந்தியாவின் ஹர்சவர்தன அரசனின் திக் விஜயத்தை தடுத்தான்.
- தக்கணத்தில் கலிங்கம், கோசலா, விசாகபட்டினம், விஷ்டபுரம், வேங்கை முதலிய பகுதிகளை இணைத்தமை.
- பல்லவ அரசனான முதலாம் மகேந்திர வர்மனைத் தோற்கடித்து ( கி.பி.600-630 ) காஞ்சிக்கருகில் உள்ள பகுதியை இணைத்தமை.
- மேற்குப்பகுதித்துறைமுகங்களுடாக பாரசீகம் மேற்காசிய பகுதிகளுடன் வர்த்தகத்தை மேற்கொண்டமை.
- பாரசீகத்துடன் பூஸ்ரு அரசன் மூலம் தூதரகத் தொடர்பை மேற்கொண்டதாக அராபிய குறிப்புகளில் இடம்பெற்றுள்ளன.
- கி.பி.641 வந்த ஹியுங் சாங்கின் குறிப்பில் அரசன் பற்றி குறிப்பிடப்பட்டுள்ளது.

- சாளுக்கிய குறிப்புக்களில் இரண்டாம் புலிகேசி பரமேஸ்வர, சத்யக்கிரஹ மகாராஜாதிராஜா முதலிய விருதுப் பெயர்களைச் சூடியுள்ளான் என குறிப்பிடப்பட்டுள்ளன.

- இவன் தனது இளைய சகோதரன் முதலாம் விஷ்ணுவர்தனவை வேங்கை பகுதியிலிருந்து கிழக்குப் பகுதியின் நிர்வாகத்துக்கு நியமித்தான்.

- இவனது இறுதிக்காலப்பகுதியில் பல்லவ அரசுகளுடன் சண்டை ஏற்பட்டது.

- முதலாம் நரசிங்க வர்மன் என்ற பல்லவ அரசன் 2ம் புலிகேசியைக் கொலை செய்தான்.(கி.பி.642)

**(8 புள்ளிகள்)**

(iii)**முதலாம் இராஜேந்திரனின் ஆட்சியில் இடம் பெற்ற சோழர்களின் அதிகாரப் பரம்பல்**

- முதலாம் இராஜேந்திரன் மேற்கொண்ட போர்கள் பெற்ற வெற்றிகள் பற்றி அவனது குறிப்பான திருவாலங்காட்டுச் செப்பேடு, மற்றும் திருமலைப் பாறைக் குறிப்பிலும் இடம்பெற்றுள்ளன.

- வட இந்தியாவின் கிழக்குப்பகுதியை இலக்குவைத்து வங்காளத்தின் கங்கை நதி வரை தாக்குதல் தொடுத்தமை.

- பாண்டிய கேரள பகுதிகளைக் கைப்பற்றி அதன் நிரவாகத்திற்கு தனது புதல்வர்களை நியமித்தமை.

- இலங்கையின் வட பகுதியில் அதிகாரத்தை ஏற்படுத்தியமை, 5ம் மகிந்தனைக் கைதியாக கொண்டு சென்றமை.

- பொலன்னறுவையை தலைநகராகக் கொண்டு இலங்கையை மும்முடிச்சோழ மண்டலம் என அழைத்தமை.

- தென்கிழக்கு ஆசியா பகுதிகளைத் தாக்கி அந்தமான் நிகோபார் தீவுகளைக் கைப்பற்றியமை.

- இவ்வாக்கிரமிப்பால் சுமாத்ரா, கடாரம், மலாயத், தீபகற்பம், பர்மாவின் கீழ்ப்பகுதிகளை, தனக்கு அடிபணியவைத்து தென்கிழக்காசியாவரை தனது அதிகாரத்தை பரப்பியமை.

- இந்து சமுத்திரத்தினதும் தென்கிழக்காசியாவினதும் வியாபாரத்தை தமது கட்டுப்பாட்டில் கொண்டு வந்தமை.

**(7 புள்ளிகள்)**

(iv) **அரேபிய, துருக்கியப் படையெடுப்புக்கள்**

- வியாபாரத்தில் ஈடுபட்டுவந்த அராபியர் இஸ்லாத்தின் தோற்றத்துடன் அதனை பரப்பும் பணியை முன்னெடுக்க அரசியல் நடவடிக்கைகளிலும் கவனம் செலுத்தலாயினர்.
- இதன் விளைவாக இவர்கள் இந்தியாவைக் கைப்பற்றினர்.
- மதினாவில் கலிபா இரண்டாம் உமரின் காலத்தில் இதன் ஆரம்ப பணி இடம்பெற்றது.
- அரேபியர் இந்தியா மீது கவனம் செலுத்தியமைக்குப் பிரதான காரணம் வர்த்தகமாகும். இந்தியாவின் செல்வத்தைப் பெற்றுக்கொள்வதற்கு கலிபாக்கள் ஆர்வம் காட்டினர்.
- அரேபியரின் முதலாவது தாக்குதல் கி.பி.637இல் பம்பாய் பகுதி மீது ஏற்பட்டாலும் அது வெற்றியளிக்கவில்லை.
- இரண்டாவதாக புறோச், டேபால் பகுதிகளைத் தாக்கினர் இதுவும் வெற்றி அளிக்கவில்லை.
- மூன்றாவது தாக்குதல் கி.பி. 712 முஹம்மத் பின் காசிம் தலைமையில் இடம்பெற்று சிந்து மற்றும் முல்தான் பகுதிகளைக் கைப்பற்றினர்.
- அரேபியர் கைப்பற்றிய இந்தியாவின் மேற்குப்பகுதிகளைச் சுமார் ஒன்றரை நூற்றாண்டுகளாக தமது கட்டுப்பாட்டில்வைத்திருந்தனர்.
- கி.பி.997இல் வடமேற்கு மலைக் கணவாய் ஊடாக இந்தியாவினுள் நுழைந்த முஸ்லிம் ஆக்கிமிப்பாளர்களில் முதன்மையானவராக சபக்திஜீன் காணப்படுகிறான்.
- கி.பி.997இல் சபுக்திஜின் இறக்கும் போது வடமேற்கெல்லை கணவாய் வழிகளில் அனேகமானவை முஸ்லிம்கள் வசமாக இருந்தன.
- கிபி 10ம் நூற்றாண்டில் கஜனி முஹம்மத் ( 998-1030 ) 17 தடவை இந்தியாவைத் தாக்கி துருக்கி ஆப்கான் அதிகாரத்தை இந்தியாவில் ஏற்படுத்த முனைந்ததுடன் ஏராளமான செல்வத்தையும் கொள்ளையிட்டான். (கி.பி.1000 ராஜபுத்ர அரசன் ஜயபாலவைத் தோற்கடித்தல்,1026இல் சோமநாதர் கோயிலை அழித்து அதன் செல்வங்களை கொள்ளையிட்டமை)
- கஜனி முஹம்மது பின் மீண்டும் 1175இல் கோரி முஹம்மத் இந்தியாவைத் தாக்கினான்.
- கி.பி. 1175 முல்தானை வெற்றி கொண்டான்.
- கி.பி.1192 அஜ்மீரில் சௌஹான் அரசவம்சத்தைச் சேர்ந்த பிருதுவி ராசனை தோற்கடித்தான்.
- கி.பி. 1193இல் கானோஜின் ஜயசந்திரனை தோற்கடித்து வங்காளம் வரை அதிகாரத்தை விரிவாக்கினான்.

- இத்தாக்குதல்களின் பின் கிழக்கு இந்தியப் பகுதிகளைக் கைப்பற்றி முக்கியமான இடங்களில் பாதுகாப்பு அரண்களை அமைத்தான்.

- கி.பி.1206இல் கோரி முஹம்மத் இறந்ததுடன் குதுப்புத்தீன்ஐபெக், டில்லியின் சுல்தானாக தன்னைப் பிரகடனம் செய்தான். இதன்மூலம் அடிமை வம்ச ஆட்சி தொடங்கியது.

- அன்றிலிருந்து இஸ்லாமிய ஆட்சி படிப்படியாக வளர்ச்சி அடைந்ததுடன் இஸ்லாமிய சமய கலாசார விடயங்களை பரவலடையச் செய்ய இவ்வரசியல் ஆதிக்கம் வாய்ப்பாக அமைந்தது.

**(8 x 2=16 புள்ளிகள்)**